கழக வெளியீடு—நஎ

உ

முருகன் துணை.

# திருச்செந்திற் கலம்பகம்

அருஞ்சொற்பொருளகராதியுடன்

சுவாமிநாத தேசிகர்

இயற்றியது.



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
திருநெல்வேலி & சென்னை.

விலை அணா 6

கழக வெளியீடு—௯௭

உ

முருகன் துணை

# திருச்செந்திற் கலம்பகம்

அருஞ்சொற்பொருளகராதியுடன்




சுவாமிநாத தேசிகர்

:: அருளியது ::



திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை




உ

திருச்சிற்றம்பலம்

# *சுவாமிநாத தேசிகர் வரலாற்றுச் சுருக்கம்

இவர் பாண்டி வளநாட்டிலே, பரம்பரைச் சைவ வேளாளர் குலத்திலே சற்றேறக்குறைய இருநூறு ஆண்டுகட்குமுன் பிறந்து வளர்ந்து, கல்வியறி வொழுக்கங்களாற் சிறந்தவராய்த் திருக்கைலாய பரம்பரைத் திருவாவடுதுறையாதீனத்தை யடைந்து, அப்போது ஆண் டெழுந்தருளிய ஞானசாரியராகிய **அம்பலவாண தேசிக சுவாமி**களிடம் சிவதீக்கை பெற்று, துறவறத்தை மேற்கொண்டு தம்பிரானு யமர்ந்திருந்தனர்.

அக்காலத்தில், அவ் வாதீன குருமூர்த்திகளின் தரிசனத்துக்கு வந்திருந்த பாண்டி நாட்டின் திலகமாய் விளங்காநின்ற திருநெல்வேலி **மயிலேறும் பெருமாள்பிள்ளை** யென்பவர், இந்நூலாசிரியரின் நல்லறி வொழுக்கங்களையும், பத்தித் திறத்தையும் கண்டு வியந்து, இத்தகைய நுண்ணிய அறிவுடையவர்க்கன்றோ நாங் கற்ற கல்விப்பொருளைக் கற்பித்தல் வேண்டுமெனக் கருதித் தங் கருத்தினை ஞானதேசிகர்பால் விண்ணப்

*வரலாற்று விரிவை ஸ்ரீ ஆறுமுகநாவல ரவர்கள் பதித்த இலக்கணக் கொத்திற் காண்க.

பஞ் செய்து, அவர் கட்டளையிட்டருளியபடி, இவரை அழை
துக் கொண்டுபோய், தமது வீட்டில் வைத்து மிகுந்த அன்
காட்டிக் கற்பிப்பாராயினர். முதன் முதல் இவருக்குப் பழ
தமிழ் இலக்கணமாய தொல்காப்பியத்தின் அரிய உரைகள் நா
கையும், மற்றை இலக்கண நூல்களையும், பின்னர் திருவள்
வர் குறளுரையினையும், திருக்கோவையா ருரையினையும், சிந்த
மணி முதலிய பஞ்ச காவியங்களையும், எட்டுத் தொகை, பத்து
பாட்டு முதலிய சங்க மருவிய நூல்களையும் ஐயந்திரிபின்
விளங்குமாறு பன்னீராண்டு கற்பித்தனர். பின்னர் திருநெ
வேலிக்குக் கீழ்ப்பாலுள்ள செப்பறைப் பதியில் வசிக்கும் **கன**
**சபாபதி சிவாசாரியரா**ல் வடமொழி வியாகரண முதலிய நூ
களையுங் கற்பிக்குமாறு செய்தனர்.

பின்பு மயிலேறும்பெருமாள் பிள்ளை இந் நூலாசிரியனை
ஆதீனத்துக்கு அழைத்துப் போய்த் தம் ஞானசாரியரிட
ஒப்புவித்தனர். அதன் மேல் இவர் நிருவாண தீக்கை பெற்
வீடு பேற்றிற்குரிய ஞான நூல்களாகிய சிவஞானபோத மு
லிய நூல்களையெல்லாங் கற்றுச் சிந்தித்துத் தெளிந்தனர். இ
ரிங்ஙன மிருக்குங் காலத்தில் ஆண்டுவந்த இலக்கண விளக்
ஆசிரியராகிய வயித்தியநாத நாவலர் இவரது படிப்பின் திறமை
யைக் கண்டு வியந்து பேசி இவருடன் நட்புக் கொண்டனர்
சிலநாட் சென்றபின் ஞானசாரியர் இவருக்கு ஆசாரியாபிஷே
கஞ் செய்து, ஈசான தேசிகர் என்னுஞ் சிறப்புப் பெயருந் தந்து
திருநெல்வேலியிலே தமதாதீன மடாலயத்திலிருக்கும்படி கட்
டளையிட்டனர். அவ்வாறே திருநெல்வேலி மடாலயத்திற்

எழுந்தருளிய பின்னர் தாங் கற்ற இலக்கண நூல்களிலுள்ள அரிய விதிகளை யெல்லாந் திரட்டி **இலக்கணக்கொத்**தென ஓர் அரியநூல் பாடியருளி அதற்கு ஒரு நல்லுரையு மருளினர். அங்ஙனமே தாங் கற்ற ஞானசாத்திரக் கருத்துக்களை யெல்லாந் திரட்டித் **தசகாரிய** மென்னும் ஒரு நூலையும் வேறு பல நூல்களையுஞ் செய்தருளினர். நன்னூலுக்கு விருத்தியுரை இயற்றிய **சங்கர நமச்சிவாயப் புலவர்** முதலாயினோர் பலருக்கும் போதகாசிரியராயு மிருந்தனர்.

அப்போது இவர், விசேட காலந்தோறுந் திருச்செந்தூருக்குப் போய் முருகக்கடவுளை வழிபாடியற்றி வருவாராயினர். இங்ஙன மிருக்கும்போது அக் கடவுள்மீது பல பாக்களுங் கலந்திருக்கும் நயம்பற்றிக் கலம்பக மென்னும் இந்நூலைப் பாடியருளினர். இந் நூலின்கண் அமைந்து கிடக்கும் செஞ்சொற்களும், செம்பொருள்களும், பல சந்தநயங்களும், பிறவும் படிப்பவர் மனத்தை உருக்கவல்லன.

இங்ஙனம் தென்மொழி வடமொழி இரண்டிலும் புலமை நிரம்பிய தம்பிரானனவர் தம் ஆசிரியன்மார் இருவர்மீதும் அளவிறந்த பத்தி வைத்திருந்தனரென்பதற்குத் தாம் இயற்றியருளிய **இலக்கணக் கொத்து** என்னும் அரிய நூலின்கண்,

“ திருநெல் வேலி யெனுஞ்சிவ புரத்தன்
ருண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்**மயி லேறும் பெருமாண்** மகிபதி
இருபத கமலம் என்றலை மேற்கொண்
டிலக்கணக் கொத்தெனும் நூல்இயம் புவனே ”

"செப்பறைப் பதியில் வாழ்சிவத் துவிசன்
**கனக சபாபதி** கருதுவட நூற்கடல்
தபோதனர் புகழுஞ் சைவாதி ராசன்
உபய பதங்களை உண்மையொடு பணிவாம்"

என்று கூறிய அரும் பாட்டுக்களே தக்க சான்று பகரும்.

இந் நூலின்கண் (*) உடுக் குறியிடப்பட்ட முப்பத்து செய்யுட்களையும் நாடோறும் பேரன்புடனே பாராயண செய்பவர்களுக்குத், திருச்செந்தூரில் எழுந்தருளிய முரு கடவுள், வேண்டும் நல்வரங்க ளனைத்தும் அருளுவர் என்ப திண்ணம். ஆகலின் சைவ சமயிகள் அவ்வாறு இதனை பாராயணஞ்செய்து இம்மை மறுமைப் பயன்களைப் பெற் இன்ப வாழ்வடைவாராக !

சுவாமிநாத தேசிகர் சேவடி வாழ்க !

திருச்சிற்றம்பலம்.

---

திருச்சிற்றம்பலம்

# திருச்செந்திற் கலம்பகம்

## பாயிரம்

மதிக்கும் பரிதிக் கடவுளுக்கும்
வழங்கும் விழியான் அருள்மதலைக்கு
இதக்கும் படக்குங் கலம்பகப்பா
இசைக்குந் தமிழால் இனிதிசைத்தான்
புதுக்குந் தமிழ்த்தென் கடல்கடக்கப்
பொருத்துந் தோணி போல்இயல்செய்
துதிக்குந் தமிழார் துறைசைநகர்ச்
சுவாமி நாத தேசிகனே.

## விநாயக வணக்கம்

நிலம்பக வீழ்சடை நீறணி வான்மைந்தன் நீடயிலோன்
கலம்பகஞ் செந்தமிழ்ப் பாமாலை யாற்செந்திற் கண்மருவு
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத் திங்கள் வெண்கோட்டு
இலம்பக யானை முகத்தானை வாழ்த்தி இயம்புவனே.

## நூல்

### மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா

### நாலடித் தரவு - உ

சொல்வாய்மை தருங்கடவுட் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்விப் பனிமலய முனிவினவ
அம்புயனும் அறியாத அறமுதலாந் தமிழ்மூன்றும்
சம்புவுமன் றுடனுணரத் தருவோய்நீ முருகோனே

கண்சுருங்க விரித்தபசுங் கலவமயில் எனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுண மணியாழி யெழுபரித்தேர்
அந்தினக ரனைத்தடுக்கும் அணிமணிமா ளிகைப்புரிசைச்
செந்தில்நகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

## ஈரடித் தாழிசை - ௬

ஊனாகி உயிராகி உணர்வாகி உணர்வுதவும்
கோனாகி வினையளவும் குணத்தளவும் தனக்களவாய்

விரவாதி யந்தமிலா வெளியாகித் தெளியாது
பரவாதி யருமுலவாப் பாமறையுந் தாமறைய

வாக்குமன முங்கடந்து மண்ணாடுவிண் ணிடத்தியற்றும்
போக்குவர வொழிந்துவிழிப் புலத்துருவும் அருவமுமாய்

வேதாந்தம் சித்தாந்தம் விளங்குகலாந் தந்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினுமப் புறம்போகி

உணர்ந்தாரும் உணராரும் உணராமல் உயிர்க்குயிராய்ப்
புணர்ந்தாலும் ஆறாறு புலன்நலமுங் கலவாது

நின்றதனிப் பரம்பொருளாம் நினக்கொருபேர் இலையெனினும்
இன்றுகுக னெனப்பெறுவ திளையோய்நின் விளையாட்டே.

## ஓரடி அராகம் - ௪

அருமறை முறையிட அறைகழல் பறையிட
அடியருள் நினைவ துன்னடி;

ஒருமையின் இருமையும் உதவிய மதியென
ஒளியொடு குளிர்வ துன்முகம்;

வருமுலை வனிதையர் இருவரும் மயிலினம்
மழையென விழைவ துன்னெழில்;

பெருகலை கெழுகலி கடலினு மெழுமடி
பெருகுவ துருகு நின்னருள்.

## பெயர்த்தும் - ஈரடித் தாழிசை - ௬

தாயென்றும் தந்தையென்றும் சகமீன்று தருமுனக்குச்
சேயென்று பின்னுமொரு திருநாமம் வருமாறென்

மூந்திலென்றே அடியருள முளரிதொறும் இருந்தாய்க்குச்
செந்திலென்றே உரைக்குமொரு திருப்பதியும் விருப்புளதே

அயிலேற்று வருங்காலம் அல்லால்நீ கொல்லாயோ
மயிலேற்றம் எனுனக்கு மற்றேற்றம் பெற்றிலேயோ

ஓராறு பனிமதியி னொடுபவள வரையினிரைத்
தீராறு தினகரரும் இடையிடையே உதித்தாங்குக்

கருணைபொழி திருமுகமுங் கணமணிக்குண் டலநிரையும்
திருநெடுந்தோள் களுங்கமலச் சேவடியுந் தாவடியும்

பாடாது நினையாது பரவாத எனக்குவினை
கூடாத தொண்டரொடுங் கூட்டியுநீ காட்டினையால்.

நாற்சீரடி அம்போதரங்கம் - உ

பிறந்ததும் இறந்ததும் பெருமநின்புகழ்
மறந்ததும் அல்லது வணங்கி லேன்நினைக்

காமமும் வெகுளியும் களிமயக்கமும்
தாமிடை கலந்தெனைத் தலைமயக்கலால்.

நாற்சீரடி அம்போதரங்கம் - ச

உண்பதும் உடுப்பதும் உவந்து தேடினேன்;
கண்படை கனவினில் கலங்கி வாடினேன்;
உய்திறம் இதுவென உணர்வு போயினேன்;
செய்திறம் இதுவெனும் தெரிவில் பேயினேன்.

முச்சீரடி அம்போதரங்கம் - ச

எவ்வாறெனை உய்யக்கொள்வாய்;
எழுதா மறையின் திறத்துள்ளாய்;
செவ்வாய் அனையான் திருப்பிள்ளாய்;
தெரியா நெறியுன் செயல்விள்ளாய்.

இருசீரடி அம்போதரங்கம் - அ

மெய்யு நீஇ, பொய்யு நீஇ, விண்ணு நீஇ, மண்ணு நீஇ,
இருமை நீஇ, செம்மை நீஇ, ஆதி நீஇ, சோதி நீஇ.

## தனிச் சொல்

எனவாங்கு

### ஆறடி நேரிசையாசிரியப்பா - சுரிதகம்

நீயல தில்லை யாவையும் உலகம்
மற்றவற் றிடையான் அவத்துடற் பொறையொடு
கறங்கெனத் திரியாது பிறங்குசுற வெறியும்
நந்தூர் கடற்றுறைச் செந்தூர் பரவுவன்
காமரு பூந்தொடைக் கடம்பநின்
தாமரை மலரடி தருகமா எனவே. (

### வெண்பா

*எனதே குகன்செந்தில் ஏத்துதொழில் அன்னேன்
தனதே எனையாளுந் தன்மை - வினவின்
மறத்திமணா ளன்புமுதல் வாழ்வையெலாம் நெஞ்சே
குறத்திமணா ளன்புகழே கொள். (௨

### கலித்துறை

*கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ்
சாரன்பர் கூட்டமல்லால்
நள்ளார் பிணியின் நலிவு
படார்தெய்வம் நாளுமற்றொன்
றுள்ளார் முருகன்செந் தூர்பிரி
யாதவன் ஒண்கமலக்
கள்ளார் விரைமலர்த் தண்டையந்
தாள்தொழக் கற்றவரே. (௩

### ஆசிரிய விருத்தம்

*கற்றாலும் நீடூழி கழித்தாலும் கழியாத
கரையில் வாழ்வு
பெற்றாலும் முருகனடிக் கன்புபெறா தவருலகிற்
பிறவி தீரார்
இற்றாலுங் கலிநலிய இரந்தாலும் பேதையராய்
எழுத்தா றுள்ளத்

தற்றாலும் அவனிருக்கும் செந்திலென்றோர்
முத்திலென்றும் அடைவர் தாமே. (௪)

## ஆசிரியப்பா

தாமரை பயின்ற நான்முகக் கடவுள்
எழுதா மறைப்பொருள் பழுதாங் குரைப்ப
வீக்குமணிக் கடகம் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா றின்னமும் வருத்த
விரும்பிய தால்எனத் திரும்பிட நஞ்சேய்
பாயிருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறு சுறவெறி நாண்முரி திரைமுகட்
டெழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயிற் புறத்துச்
சேயொளி மேனி திகழ்வீங் கெழுந்தனை
தெய்வவான் கருணியும் மொய்வரை யருணியும்
தூவலங் கயிலும் சேவலங் கொடியும்
ஆறு முகமும் நீறணி புயங்களும்
பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களும்
கந்தனின் நாமமும் செந்திலம் பதியும்
வணங்கவும் நினைக்கவும் வாழ்த்தவும்
இணங்கலிற் பரவினேன் எனைவிதித் ததற்கே. (௫)

## வெண்பா

அதற்கிதற் சென்றுள் அவம்போக்கி ஆக்கம்
முதற்பொருட் கும்இன்றி முயன்றால் - நுதற்கணவன்
சந்ததியா னஞ்செய்யான் தானுவந்து செந்திநகர்
வந்ததியா னஞ்செய்யா மல். (௬)

## புயவகுப்பு - ஆசிரிய வண்ணவிருத்தம்

* மலர்தலை ஞாலத் தலகில வாமுற் றுயிர்களு
    மூந்திக் கண்பண்டு தந்தன
[illegible]றபசர் வாய்மைத் திசைமுக சோமற் றிடுமுறை
    தண்டித் தன்றங்கை கன்றின

மகபதி வானத் தரசுவ ழாமற் றிருமுடி
அன்பிற் கொண்டும்பு ஊனந்தன
வழிபடு கீரற் கழிசிறை தீரப் பரிவொடு
முந்திச் சென்றஞ்ச லென்றன

குலமட மான்மெய்ப் புதல்வியும் யானைக் குமரியு
மொன்ருத் தின்பங்க வர்ந்தன
குழையுமென் வாய்மைத் தமிழுந னீபத் தொடையலு
மொண்பொற் சந்துந்த வழ்ந்தன
குரைகழ ஞடித் தொழுநெறி சேர்கொத் தடியவர்
தங்கட் டுன்பங்க ளாந்தன
குவிமுகை வேலைக் கவிழிணர் மாவைத் தடிதலு
மன்றிக் குன்றும்பி ளந்தன

உலகுண ராமுத் தமிழுணர் நீதிக் குறுமுனி
வந்தித் தென்றும்பு கழ்ந்தன
உலைமலி வாகைத் திருநெடு வேலிற் சிரமவி
தங்கட் கங்கங்கி யைந்தன
உமைமுலை பீர்விட் டொழுகிய பாலுக் கழுதுயர்
பொன்றக் கொண்டங்க ணுந்தின
உறுகெழு கோலத் திருமுது சூரைக் கிளையொடு
மஞ்சக் கொன்றங்கண் வென்றன

கலவம யூரத் துரகத மேறிப் புவனியு
மெண்டிக் கெங்குந்தி ரிந்தன
ககனவ ளாகத் தளவிய கோழிக் கொடிவளர்
கம்பத் தம்பம்பொ ருந்தின
கலைமதி போலத் திருமுக நீள்கட் கடையருள்
பொங்கிச் சிந்துந்தி பம்பின
கடலலை வாய்முத் தினவலை வீசிக் கரைபொரு
செந்திற் கந்தன்பு யங்களே. (௯

## கலித்துறை

புயமா றிரண்டுக்கும் பொன்னணி யாம்புள்ளி மான்மகட்கும்
கயமான் மகளுக்கும் கண்ணிணை யாங்கடுங் கூற்றுவந்தால்

நயமாய தொண்டர்க்கும் நற்றுணை யாம்செந்தில் நன்னகர்மே
வியமான் மருகன் திருக்கரத் தேந்திய வேற்படையே. (௮)

## கலி விருத்தம்

படைக்கணார் மையல்நோய்ப் படுவ தல்லது
கடைக்கணான் பரகதி காணுமா றுண்டோ
உடைக்கணா திபன்றனக் கிளஞ்செந் தூர்த்தமிழ்த்
தொடைக்கணான் றுயர்புயத் தோகை பாகனே. (௯)

## குறளடி வஞ்சிப்பா

பாகந்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்
பொருதெனவளை யுடனிலகிய
நவமணியுமிழ் கலிகெழுபுனல்
திரைபொருமொலி முரசுடனதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வரு சேயோன்
திருந்தடி துணையெனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே. (௧௦)

## கலிப்பா

*நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கியெதிர் வருங்காலம்
செறிக்குஞ்சித் திகழ்தருநின் செந்திலுமென் புந்தியதே
பொறிக்குஞ்சித் திரத்தினுடைப் பொரியாகப் புகுந்துகொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்சேவற் கொடியோனே.

## வண்டோச்சி மருங்கணைதல் - ஆசிரிய விருத்தம்

கொடியாரின் றிடைதேய்ந்து கொழுங்கலவைத்
துணைமுலையுங் குழலுந் தாங்கி
ஒடியாரின் றுளதின்னும் உமக்குமிரங்
காதவுள்ளம் உளவோ வண்டீர்
வடியாரின் றிலங்கிலைவேல் வலனேந்தி
செந்தில்அரு மருந்தன் னாள்தன்
முடியாரின் றளியெனுஞ்சொல் முடியாரின்
றநுராகம் முயல்கின் றீரே. (௧௨)

## வண்டு விடு தூது - வெளிவிருத்தம்

ஈர நாண்முகை இளமுலைப் பசப்பொழித் தளியீரே
சூர ஞள்விழித் துணையிணை கொள்வதற் களியீரே
நார நாளமென் நளினநீர்ச் செந்தில்புக் களியீரே
ஆர ஞள்வரு வேங்கையின் மலர்கொணர்ந் தளியீரே.

## வஞ்சித் துறை

*அளியாலுஞ் சோலை
ஒளிசேர்வான் செந்தூர்
தெளிவாயால் நெஞ்சே
அழியாவீ டுண்டே. (க

## மேகவிடு தூது - கலித்துறை

உண்டு வாரிதி பசுஞ்சிறைக் கிளிமயி லுருவாகி
எண்டி சாமுகம் புதைத்தயில் எனமினி இரைத்தீரேல்
கண்டு நான்இரு கண்களும் உள்ளமுங் களிகூரக் [வீடே
கொண்டல் காள்இனிச் செந்தில்வாழ் குமரனைக் கொண

## அம்மானை - மடக்குத் தாழிசை

வீரன்நெடு வெள்வேல் வியன்செந்தில் எம்பெருமான்
பாரில்உயி ரெல்லாம் படைத்தனன்காண் அம்மானை;
பாரில்உயி ரெல்லாம் படைத்தனனே யாமாகில்,
ஆரணங்கள் நான்கும் அறிவனே அம்மானை;
அறிந்து சிறைஅயனுக் காக்கினன்காண் அம்மானை

## இரங்கல்-வஞ்சி விருத்தம்

மான்மகள் காதலர் மஞ்சுரும்
தேன்மலி காஉயர் செந்தூரர்,
கான்மணம் நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர இரங்காரே. (க

## ஓரொலி வெண்டுறை

காரேய் நிறத்தறுகட் கறுவுடைக் கடுங்கூற்றங் கலந்த கா
யாரே விலக்குவார் அந்தோ சமரங்காள் அறிநி ன்றே;

நீரே உயப்போமா றின்று வலித்தீரேல்,
கூடேரய் வடிவேற் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே. (கஅ)

## வெண்பா

தொழுதிரந்து வெம்பசியால் சோர்ந்திடுவார் கைபார்த்து
அழுதலமந் தேங்கி அலைவார் - முழுதும்
பெருகுகனை வாரிமணி பெய்திரைக்குஞ் செந்தில்
முருகனை வாழ்த்தா தவர். (க௯)

## கலிப்பா

*வரங்கொண்ட உமைமுலைப்பால் மணங்கொண்ட
செவ்வாயும்,
தரங்கொண்ட களிமயிலும், புன்னிருண்ட
கண்மலரும்,
சிரங்கொண்ட மறைஇறைஞ்சுஞ் சேவடியும்
செந்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன் கண்ணைவிட்டு
நீங்காவே. (உ௦)



## பாண் - கலித்துறை

நீங்காத நேயத்தின் நீடுதத்த தையலும் நின்னையன்றிப்
பாங்காய பாண பிரிந்ததென் றால்உமை பாலன்செந்தில்
யாங்கா ணலமெனில் எம்மை வினவுதி; ஏதிலரைத்
தாங்காது நின்மதி தன்னூசி யின்திறந் தான்பிழைத்தே.

## ஆசிரிய வண்ணவிருத்தம்

*பிழையாத தொண்டர் சிறிதேசெய் அன்பு
பெரிதாக நெஞ்சம் மகிழ்வார்,
உழையாளும் எங்கள் குறமாது கொண்கர்,
உடைபோலர் தங்கும் இடமாம்;
பழுவாய் திறந்து வளைசூல்உளைந்து
பொழிலார் இருந்து எனவே
மழைபோல் முழங்கி அலையாழி சிந்து
வளமேவு செந்தில் நகரே. (உக)

## தலைவி கூற்று - வெண்பா

நகைமதிய மேவடவை நாப்போல்இவ் வண்ணம்
தகைமதியாய் நின்று தழல்வாய் - அகமகிழ்ந்து
கற்பசலை தந்தார் கடற்செந்தில் வாய்எமக்குப்
பொற்பசலை தந்தார்முன் போய். (உரு

## கலித்துறை

போய்வத னாரம்பம் ஆடார், திருச்செந்தில் புக்குறையார்,
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார்,திரு மால்மருகன்
காய்சின வேலு மயிலுமென் னார்,கடல் சூழுலகில்
பேயறி வாளர்எவ் வாறறுப் பார்தம் பிறப்பினையே. (உசு

## தலைவி நெஞ்சொடுகிளத்தல் - ஆசிரியத் தாழிசை

பிறர்வாய் வசையடங்கப், பிஞ்ஞகன்சேய் திண்டோள்
நறவார் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்,
சிறைவான் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே;

குயில்வாய் ஒலியடங்கக், கூத்தன்சேய் திண்டோள்
நயமாந் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்,
செயிர்தீர் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே;

முந்நீ ரொலியடங்க முக்கணன்சேய் திண்டோள்
நன்னீர்த் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்,
செந்நீள் புனற்செந்தில் சேருதுமால் நெஞ்சே. (உஎ

## கைக்கிளை - மருட்பா

நெஞ்சே! நுதல்வியர்க்கும்; நீடுகுகன் செந்தில்அன்னாட்
கஞ்சேல் விழிக ளவைஇமைக்கும்; - பஞ்சேர்
அடிநிலம் தோயும்; அதனால்,
கமழும் குழல்இவள் கடவிடத் தணங்கே. (உஅ

## பாங்கி வேண்டல் - வெண்பா

அணங்காம் இவளுக் கவிர்மதியம் ஒன்றே
வணங்கா வரும்தென்றல் ஒன்று - அணங்கூர்
இளமுருகா செந்தில்நகர் எந்தாய்வந் தாளாய்
உளம்உருகா வேய்இசையும் ஒன்று. (உ௯

## தலைவியை வியத்தல் - கலித்துறை

ஒன்றுடை யான்புலித் தோலுடை யான்மைந்தன் ஓங்குபரங்
குன்றுடை யான்திருச் செந்தில்அன் னோர்குல வாழையிள
மென்துடை யாள்நடை யால்இடை யால்விழி வேற்கடையால்
நின்றுடை யால்சிறப் பால்எவ ரேனும் நிலைகுலைந்தே. (௨௮)

## மதங்கியார் - கலித் தாழிசை

குலைகுலுங்கு வாழையின் கோழிலைப் பசுங்கொடைக்
குளிர்நிழற்கண் இரவிதேர்க் குரகதங்கள் அருவியாய்
அலைகுலுங்கும் நறவமுண் டயர்வுயிர்த்த காவுசூழ்
அங்கண்எந்தை செந்தில்பாடி ஆடுமா மதங்கியார்
முலைகுலுங்கு மாகில்மாரன் முடிகுலுங்கும்; அமுதவாய்
மொழிகுலுங்கு மாகில் ஆவி பழிகுலுங்கும்; அல்குலங்
கலைகுலுங்கு மாகில்நாடு நிலைகுலுங்கும்; மாமுகக்
கஞ்சமுங் குலுங்குமாகில் நெஞ்சமுங் குலுங்குமே. (௨௯)

## இரங்கல் - இன்னிசை வெண்பா

குலுங்கும் முலைமேற் குளிர்பசலை கண்ணீர்
அலங்கும் அருநாணும் ஆய்வளையும் நீங்கும்
இலங்கிலைவே லோனை எறிகடற்செந் தூர்வாய்
உலக்கொளமுன் போம்மடவார் மாட்டு. (௩0)

## சித்து - ஆசிரிய விருத்தம்

மாட்டே மல்லேஞ் சித்துவித்தை
மகனே செந்திற் குகன்பால்நாம்
கேட்டே அறிந்த தனக்குரைப்பக்
கேளாய் இதுபொய் அல்லமெய்யே
வேட்டேம் பசியால் உண்ண இன்று
விளைந்த சஞ்சந் தனிலேபொன்
காட்டே மாகில் நீபடைத்த
கறியுஞ் சோறும் வேண்டாமே. (௩௧)

## இரங்கல் - கலித்துறை

வேண்டின ரானால் ஊன்நகு வேலர் வியன்செந்தில்
ஆண்டகை யானார் மான்அனை யாரை அகல்வாரோ
கூண்டடல் வில்லிட் டம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டல் முழங்கிப் பொழிநாளே.

## பனிக்காலம் - வஞ்சித் தாழிசை

நாள்வனசம் முகங்கூம்ப நீள்குளிர்செய் பனிக்காலம்
வேள்மருவு செந்திலின்எங் கேள்வர்தமை நினையாவே

மகன்றிலொடும் பெடைசேவல் புகன்றணையும் பனிக்கா
குகன்றனது செந்திலின்எம் அகன்றவரை நினையாவே

தொலைபவர்மெய் குனியமதன் சிலைகுனியும் பனிக்கால
மலைமகள்சேய் செந்திலின்எந் தலைவர்தமை நினையாவே

## வெண்டாழிசை

நினைவு மொன்றே, உரையு மொன்றே;
பனவன் செந்தில் பணியா தொன்றே;
வினையில் வீழ்ந்தவர் பால். (ரு

## கலிப்பா

*பால்வெள்ளை நீற்றானும், பல்லுயிரும் படைத்தானும்
சூல்வெள்ளை மணிப்பணிலஞ் சுமந்ததிருக் கரத்தானு
சால்பெள்ள வில்லாத தனிநெடுவேற் படையானும்
சேல்வெள்ளம் பரந்துலவுந் திருச்செந்தி லிடத்தானே

## கலித்துறை

*இடத்தானம் ஆறெழுத் தெண்ணக்கண் ணார்நின் இணையடி
பிடத்தானம் ஆறும் பிரியா திருக்கப் பெருங்கருணைக்
கடற்றான் எனக்கருள் வாய்செந்தில் வாய்த்தென் கலைமுழு
குடத்தான மாதவற் கோதிய ஞானக் குருபரனே. (ரு

## மடக்கு - ஆசிரிய விருத்தம்

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
படரு நாக வரும்பீரே படரு நாக வரும்பீரே
யரவப் புணரி மகரமே யரவப் புணரி மகரமே
யவலங் கழிய நந்தனமே யவலங் கழிய நந்தனமே
பிரமாத் தண்ட லைப்புடைத்தான் பிரமாத் தண்ட லைப்
[புடைத்தான்
பிறவா னுழைசெந் தினகரனே பிறவா னுழைசெந்
யுரவ ராலே நாவாயே யுரவ ராலே நாவாயே [தினகரனே
யோதக் கடனீர்க் குருகீரே யோதக் கடனீர்க் குருகீரே.

## தலைவியை வியத்தல் - கலிப்பா

கீரமவை ஓரிரண்டும் கிளவிதனக் கிணையாகும்
ஆரமவை ஓரிரண்டும் அலர்முலைமேல் அணியாமால்
தாரமவை ஓரிரண்டுந் தாமுடையான் செந்தில்அன்ன
கோரமவை ஓரிரண்டும் கொண்டமதர் விழியார்க்கே. (ந அ)

## ஊசல்

ஆர்க்குமது கரமாட மாலை யாட
அணிகலையும் மேகலையும் இடையு மாட
வார்க்குவிமென் முலையுமணி வடமு மாட
மதிமுகமும் நுதல்வெயர்வும் நகையு மாடத்
தார்க்கமல அடிச்சிலம்பு புலம்பி யாடத்
தாழ்குழையும் நீள்விழியுந் தழுவி யாடக்
கூர்க்கதிர்வேற் குகன்செந்தில் பாடி யாடிக்
கோகனகத் திருவனையீர் ஆடி ரூசல். (ந க)

## ஆசிரிய விருத்தம்

ஊச லாட்டெனப் போய்வரு பிறப்பெனும்
உடற்பொறைச் சிறுவீட்டில்
தேசி லாதபுல் லறிவுடை வாழ்க்கையின்
திறந்திறந் தொழிலேனே

காசி லாநெடுங் கடலலை வாய்த்தடங்
கரைவரி வளையீன்ற
மாசி லாமணி எய்செந்தில் மேவிய
வானவர் பெருமானே. (ச

## களி - தாழிசை

பெருமை மாநிலம் வலம தாய்வரு
பீலி மாமயி லூர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி
யுள்ள மேதகு களியரேம்;
பரைம ஞேன்மணி புவனி நாரணி
பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை
பண்ணும் உண்மகிழ் வெளியதோ
மருவு கேழலும் மீனும் ஆமையும்
மாய னுக்கு விருப்பமா
மானி னைக்கை விடான்உ ருத்திரன்
மதியும் நாடொறும் முயல்உணும்
அரிய வேள்வியில் அந்த ணாளர்கள்
சுரபி கண்டிடின் முந்துவார்
ஐய னேசுர ராயி னார்சுரை
அருந்த வானவ ரியாருமே. (ச

## வேற்றேலி வெண்டுறை

யாரும்இணை யடிவணங்கும் எம்பெருமான்
தும்பிமுகற் கிளையோன் செந்தில்
சூருடைய சுடர்வடிவேல் துணர்க்கடம்பந்
தொடைக் குமரற் றொழுகி லாதார்
விரிநீர் புடைசூழ் வியன்ஞா லத்திணிமேல்
பரிவால் உறுநோய் பசியால் ஒசியா
வரைசேர் அயரா வருநாள் கழியா
உரியார் இகழா உணர்வோ டுயிர்போய்
எரிவாய் நிரையத் திணும்மூழ் குவரே. (சவ

## கலித்துறை

மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனம்முன் ஈந்துபழந்
தாழ்கான யாறு துறந்திறந் தாங்குநின் றன்னையன்றி
வீழ்கா தலின்தெய்வம் வேறெண்ணி யான்மெலி யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காவுள் இரங்குவையே. (௪௩)

## இரங்கல் - இதுவுமது

இரங்கி மெய்கரிச் திருஞ்சிறை அடைந்திட ரிடைமூழ்கி
வருங்கண் நீரொடு நாணொடு மறுகிய வரிவண்டூர்
கருங்கண் வார்முலைக் கௌரிசேய் செந்திலில் கார்காலம்
ஒருங்கு நம்மையும் ஒழிந்தன ரோஎமை ஒழிந்தாரே. (௪௪)

## சிந்தியல் வெண்பா

ஒழிந்தன துன்பம் உவந்தன உள்ளம்
இழிந்தன நல்வினை யெல்லாஞ் - செழும்புனல்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து. (௪௫)

## இரங்கல் - ஆசிரிய விருத்தம்

சேர்ந்த போது குளிர்ந்தும் அன்பினர்
தீர்ந்த போது கனன்றும்வான்
ஊர்ந்து கந்தன் உகந்த செந்தில்
ஓதுங்கு வெண்பனி லங்கள்போல்
ஈர்ந்து பொங்கிருள் நுங்கி யெங்கணும்
எங்கள் அங்கம் நடுங்குமா
றூர்ந்த வெப்பனி சிந்தி முந்துற
அந்தி வந்தெழும் இந்துவே. (௪௬)

## இதுவுமது

இந்துவும் இரவியும் நின்றென உலவிய
இம்பரின் எழுவகையா
வந்துறு பிறவியின் சோர்ந்துழல் உடனுறும்
மங்குதல் ஒழிவேனே

செந்திலும் எனதிரு கண்களும் அடியவர்
சிந்தையும் அருமறைநூல்
அந்தமும் மகிழ்வொடு சந்ததம் உலவிய
அம்பிகை திருமகனே. (ச

## கலித்துறை

மகவான் அரசும், அழிவற்ற யாக்கையும், மண்பதையும்,
செகவாழ்வும், மற்றவை யாவும்பொய் யே;தமிழ்ச் செந்தில்பு
தகவா ரிசமலர்ந் தங்கைகள் கூப்பிநின் றுறுதிரு
முகவா னவனைப் பணிவதொன் றேமெய் முயல்பவர்க்கே.(ச

## கலித் தாழிசை

முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையும்
நயனுணர் செந்திலான் நல்குமே ;
நயனுணர் செந்திலான் நல்கா னாயின், "
அயனொரு வானவர்கள் ஆக்குதற்கு வல்லவரும் அல்லரன்

## குறட் டாழிசை

அன்றல இன்றும் அஞரெய் தாவர்வேள்
மன்றலஞ் செந்தூர் வாழ்த்தா தாரே. (ரு

## இரங்கல் - அடிமறிமண்டில ஆசிரியப்பா

தாரார் கொல்லோ தம்குளிர் தாரே
வாரா ராயின் மான்அனை யீரே
பாரா ராலோ பனிபடு நாளே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே. (ரு

## பாங்கி கூற்று - வஞ்சி விருத்தம்

அவரும் அங்குளர், அன்பினால்
இவரும் நெஞ்சம் இரங்கினர்;
சிவன்மகன் பயில் செந்தில்வாய்
எவரும் என்செய்வர் இன்பமே. (ரு

## ஆசிரிய வண்ண விருத்தம்

இன்பமும் துன்பமும் சங்கடங் கொண்டயர்ந்
தங்குமிங் குஞ்சுழன் றிடுமாயத்
துன்பவெங் கும்பிஅங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் கழிவேனோ?
புன்குருந் துந்திரன் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசித்
தண்பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணும்
தந்ததென் செந்தில்எம் பெருமானே. (ருங)

## கார்கண்டு பாகனோடு கழறல் - இதுவுமது

பெருமான் மதிபொதி சடையா னுடனுறை
பிணைமான் உதவிய செந்தூரன்
கருமா மயிலென உறைவாய் சிதறிய
கணமா மழைமுகில் கண்டாலே
யொருமான் விழிவழி புனலோ உடல்வழி
உயிரோ விடுகுவள் அந்தோயான்
வருமா றறிகிலன் இனிநீ விரைவுடன் வலவா
கடவுதி வன்தேரே. (ருச)

## சிந்தடி வஞ்சிப்பா

தேராதவன் வழிமறுகிய திரள்சோலை
வாரார்மல ரிடையொழுகிய மதுமாரி
நீரார்வயல் செந்தூரனை நினையாதார்
யாரேனும்
எழுவகைப் பிறப்பினும் இயங்கி
அழிகுவர் கறங்கென அவலம்நனி உழந்தே. (ருரு)

## வண்டு - கலித்துறை

[illegible]வாத டட்டருப் உன்னுத நெஞ்சும் உருப்பசப்பும்
[illegible]வாத காதலுடனே குன்றுவெண் ணேர்தியல் சேர்குறிஞ்சிக்
[illegible]வானவனை நினையோன் எனக்கன்மை சேட்கிலராய்ச்
[illegible]தூது காத்தொடு செந்திற்சென் றேகண்ட தோகையர்க்கே.

## வெண்பா

தோகைபுறம் ஆக்குந் துணைத்தாள் அருவினையேன்
ஓகை யகம்ஆக்க ஒண்ணாதோ - பூகமலி
தேங்கடம்பாய் செந்தில் திருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல். (

## இடைச்சியார் - கலிமுரி

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவார்
போல்நி லாநகை பூத்தசெவ் வாய்மலர்த்
தகலும் வாள்மறு கெல்லாம் மறுகச்சென்
ருவின் பால்விலை யாக்கும் இடைச்சியார்
தகலு மாகுங் குடமுலைப் பால்விலை
தனைய லால்சிவன் சந்ததி செந்தில்வாய்
இகலும் வாள்நெடுங் கண்ணொடு நெஞ்சையும்
இவர்விற் றால்இனி யார்விலை கொள்வரே. (

## தலைவி கூற்று - ஆசிரிய விருத்தம்

கொள்வா ரன்றோ செவிப்புலத்தெங் குலத்தார்
வலித்த கொடுங்கடிப்பின்
வள்வார் முரசங் கறங்கோதை மணம்வேட்
டயரும் மனைமுன்றில்
கள்வார் கடப்பந் தொடைச்செந்திற் கந்தன்
வேல்போல் காய்கணைபாய்
புள்வார் பொருவெங் களத்தோதை கேட்டே
அகன்ற போரேறே. (

## ஆசிரிய விருத்தம்

எறிரும் பசலைக் கலவைமான் மதச்சே
றெழுதிய வழிமதக் கலுழி
இரைத்தெறி கரடத் திரள்திணி புழைக்கை
இகற்கரி மருப்புறழ் முலைப்பூண்
ஈறிருங் கூந்தல் எந்திழை யவர்பால்
நலந்தனக் கலந்துழன் றவமே
நாள்கழித் தவலப் படுகுழி கிடக்கும்
நான்கதி காணுமா றுளதோ?

ஆறெழுத் துளங்கொண் டைம்புல னடக்கி
அவாவறுத் தொருநெறி துருவி
அகங்குழைந் துருகிப் பருகுமன் பினருக்
கானந்த ஞானவா ரிதியே

பாரெழுந் திரைக்குந் திரைப்பசுங் குருதிப்
பரிதியஞ் சுடரிலை நெடுவேற்
பண்ணவா விரைப்பூந் தண்ணறு வயல்புரய்
பைந்தமிழ்ச் செந்தில்வா ணவனே. (௬௦)

இதுவுமது

வானமும் புவியு மாய மாறில்ஐம் பூதம் ஒதில்
ஊனுடம் பாதல் நாயேன் ஊழ்வினைப் பகுதி யன்றோ
கூனிளம் பிறைதோய் நெற்றிக் கோடிமணிமதில்சூழ் செந்தில்
தேனினம் தொழுதார் மல்கு செஞ்சுடர் வேலி னானே. (௬௧)

கார் கண்டு பாகனொடு கூறல் - இணைக்குறள் ஆசிரியப்பா

வேலின் கிளரொளி மின்னெனத் துவன்றிச்,
சூலின் கடலென முழங்கி, மாலின் கருகிக்,
காலின் கடுவிசைத் தெறிந்து,
மேலின் பரந்து,
பாலின் பஃறுளி சிதறிக்,
கோலின் பொழிந்து
குனிசிலை வளைத்தன வாலோ ;
வாலின் சிறந்தோன் மைந்தன்
சேலின் திகழ்வயற் செந்திலின் கொண்மூ
உயங்கு தேரினும் முந்துறு மாலோ ;
சால்பின் கேள்விப் பாக
தகவினி என்னு மாலோ ;
நூலின் சிறந்த நுண்ணிடை தனக்கே. (௬௨)

இரங்கல் - ஆசிரிய விருத்தம்

தனக்கோர் உவமை யில்லாத
தந்திக் கிறையான், செந்திலும்என்

மனக்கோ யிலுங்கொண் டவன்இணைத்தாள்
வணங்கா தவரின் இணங்காராய்,
எனக்கோர் உறுதி இயம்பாமல்
இதண்காள் ஏனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலங்காள் எங்கொளித்துப்
போனார் இருந்த மானாரே. (சா

## தழை - கலித்துறை

மானார் விழிமான் மகள்கா தலனார் வாழ்செந்தூர்
ஊனார் வடிவேல் உரவோய் இனிவே றுரையுண்டோ ?
வானார் விழையுந் தழையோ தந்தாய் அம்மாநங்
கானார் குழலாள் உயிர்தந் தனைநீ கண்டாயே. (சு

## மறம் - ஆசிரிய விருத்தம்

கண்டாலும் மனம்பதைக்குங் கடுங்கூற்று நடுங்கியெமைக்
கடல்சூழ் செந்தில்
வண்டாலும் துணர்க்கடம்பன் மலர்ச்சரணம் மறவாத
மறவ ரேயாம்
பெண்டால்இன் றுளமயங்கி உயிரைவிடத் தூதுவிடும்
பெருமான் றன்பால்
தொண்டால்எங் களுக்குரைக்க வருந்தூத அவற்கியம
தூதன் நீயே. (சுடு

## தலைவனை வேண்டல் - வெண்பா

தூதுசொல வேண்டிச் சுரும்பினையும் மானினையும்
மாதுசொல விட்டாலும் மாட்டாவால் - ஓதுசெந்திற்
காங்கையா ஆறிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையாம் என்றே வெறுத்து. (சுச

## இரங்கல் - கலித்துறை

வெறுப்பார் அவர்என்னை; மின்னனை யாரெனில்
வெம்பிழையும்
பொறுப்பார் ; மறந்தும் புறக்கணி யார்;புணர்ச்
தாவிதந்துள்

சிறப்பார் ; புலவியில் நீடல்செய் யார்;நினை
வார்வினைகள்
அறுப்பார் திருச்செந்தில் வாய்இவ ரார்வந்
தலைப்பவரே. (சுஎ)

## எழுதரிதென்ன ஏந்தலை விலக்கல் - கலித் தாழிசை

அலைவாய்வளம் நந்தூர்இள நிலவாய்விரி செந்தூர்
அடல்காட்டிய கதிர்வேலவர் குடநாட்டன மனையாள்
முலைதாமெழு துவையேல்அவை குழையா;முழு மதிபோல்
முகம்நேரெழு துவையேல்நகை புரியா;திரு புருவஞ்
சிலைபோலெழு துவையேல்அவை குனியாஅடி தளிர்போல்
திடமாய்எழு துவையேல்அவை நடவாகிளி துயர்வாய்
இலவாய்எழு துவையேல்அது கலவா;நிறை யமுதம்
எங்கேஎழு துவைநீகிழி செங்கேழ்அயி லவனே. (சுஅ)

## தலைவியை ஆற்றுதல் - வெண்பா

அயில்வேற்கண் நல்லாய் அனுர்கூர்ந் தலமந்
துயிர்வேட்கை வாட்டம் ஒழிவாய் - பயிலுமதன்
பூங்கைக் கடம்புண்டு போனல் தரச்செந்தில்
வேங்கைக் கடம்புண்டு மேல். (சுசு)

## விலக்கல் - ஆசிரியத் துறை

மேல்வா னவர்தம் சிறையறுத் துயர்ந்த விளங்கிலை
நெடுவேல் துளங்கெழிற் குமரன் வியன்செந்தில்
சூல்வாய்ப் பணிலம் கிறக்கும் அலைவாய்த் துறைவா
இனிஎம் பிறைவாள் நுதலின் துணர்த்தார்
அகலம் புணர்ப்போ டேகின்
பால்வாய்க் குழவி மறிமான் மறுகும் பகுவாய்ப்
புலியின் தொனைகளால் புடைப்பப் பணைக்கோட்டு
கால்வாய் இரையா வேட்டைடபா வரவ நவிலும்
பாலைத் தெனவரற் கலை நளிர்நீர்ப் பொருநைத்
தெளிநீர் பழனன் நன்றொட் டகமன்றே. (எ0)

## வெண்பா

அகமன் றலங்கமலத் தாள்வினையேன் அன்பாற்
புகமன் றகமகிழ்ச்சி பூத்தான் - தகவென்றூ
ழுந்தினக ரம்போல் ஒளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போற் சிறந்து. (௬

## பிரியேனென்றல் - கலித்துறை

சிறந்தார் பரவுந் திருச்செந்தி லார்சிவன் றீநுதற்கட்
பிறந்தார் இணையடி பேணலர் போலப் பிணியவிழ்தார்
புறந்தாழ் குழலி புலம்பேல் உனையைம் பொறிகலங்கி
இறந்தாவி யான்படி னும்பிரி யேன்பிறப் பேழினுமே.

## ஆசிரிய விருத்தம்

*எழுயர் கடாயானை மேல்வெண் குடைக்கீழ்
இணைக்கவரி எறிய இருபால்
இன்னிய முழங்கமட வன்னங் குழீஇயனைய
ஏழையர் மருங்கு சூழக்
காழகில் நறுங்குற டுறிஞ்சுபூந் தேய்வைகடி
கமழ்தடவும் வலையம் நிமிர்தோட்
கண்ணிக் கடம்பசைய வேல்கொண்டு நீவரக்
கண்கொண் டுளங்கு ளிர்வனே
வாழிமுரி திரைமுகடு கிழியஎழும் எழுபுரவி
அருணமிசை கொடிநெ டுந்தேர்
ஆயிரங் கதிர்இரவி பாயிரும் பகலும்இருள்
அடையமிடை சினைவி டுதடங்
கோழிலை நறும்புன்னை துன்னுநுண் தாதுபடு
குவிமுகை மருட்டு முடவுக்
குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு
குலவமரர் தம்பி ரானே. (எ

## ஆசிரியத் தாழிசை

*தம்பிரான் செந்திலிற் சரவணத் துதித்தோன்
அம்பொனூர் கழலிணை அன்புறப் பணிந்தோர்
உம்பராய் மன்னுவர் உயர்நிலை யடைந்தே. (எ

### மாலை இரத்தல் - கலித்துறை

அடைக்கலந் தான்இவள்; ஆனாலும் மார்பத்
 தணிகடம்பந்
தொடைக்கலந் தாருயிர் சோர்தல்நன் றோ?தொல்
 அவுணர்வெம்போர்
இடைக்கலந் தாவிப் பலியூன் உடனுண்
 டெழுங்கதிர்வேற்
படைக்கலந் தாங்கிய கையாய்!தென் செந்திற்
 பதிக்கந்தனே! (எரு)

### இரங்கல் - வெண்பா

கந்தமலர் ஆலக் கமழ்கூந்தல் ஏந்திழைமார்
தந்தமலர் ஆலத் தளருமோ - வந்தவினை
போக்கும்அரன் சேயொளிக்கும் பூம்புனற்செந் தூர்அமர்ந்த
கோக்குமரன் பூந்தார் குறித்து. (எசு)

### இதுவுமது - ஆசிரியத் துறை

குறுமுனிவற் கறமுரைத்த குமரன்மா
 செந்திலின்எங் கொலைவில் வேடர்
சிறுமியைம ணம்புணர்ந்து தீர்ந்திடினும்
 அன்பகத்தில் தீரா ரன்றே
சிறுமியைம ணம்புணர்ந்
 தன்பிற்றீர்ந் தாராயின்,
கறிவளர் வரைநாடற் கென்னும்என்
 னும்உணர்ந்த கல்வி யாறே. (எஎ)

### வெண்பா

* ஆறுமுகம் என்? கண்கள் ஆறிரண்டும் என்? அடியேற்
சேறு வினைஒழிப்ப செல்லாமோ - நீறணிவான்
கன்றே! திருச்செந்திற் கற்பகமே! நின்னருட்கண்
ஒன்றே அமையாதோ ஓத. (எஅ)

### இரங்கல் - ஆசிரிய விருத்தம்

ஓதுவார்கொலோ உயிர்உடற் பொறைமறித்
 துதவுமா றுயர்ந்தோங்கி

மோது வார்இள முகிழ்முலை வனிதையர்
முடிந்திறந் திடுங்காலைக்
காது வார்மணிக் கனங்குழை உமைமகள்
காதலர் திருச்செந்தில்
போது வார்குழ லாய்!கல்வி வேட்டுடைப்
புல்லுவிட் டகன்றாரே. (௭

இதுவுமது - கலிவிருத்தம்

அகலுறார் கனவெலாம் நனவெ லாம்தொடப்
புகலுறார் உளங்குடி புகுந்த காதலர்;
இகலுறு வேள்செந்தில் இணங்க லாரின்யான்
உகலுறு தாவிநின் றூச லாடவே. (௮

ஊசலாடல் கூறித் தோழி நகுதல் - இதுவுமது

ஆடு பூஞ்சுனை சந்தணிந் தாய்மலர்
சூடி வாய்விளர்ப் புந்தரின் தோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலின்
நாடி யானுஞ்சென் றுடுவன் நானமே. (௯

தலைவன் கூற்று: இரங்கல் - இதுவுமது

நானிலமும் எண்டிசையும் நன்கிசையும் நாளார்
தேனகு கடம்பர்உயர் செந்தில்நகர் போல்வார்
மானகு கருங்கண்இணை வஞ்சம்இடை மானல்
யானும்உயி ரும்புவியும் என்கொல்உயு மாறே. (௧௦

தோழி கூற்று: இரங்கல்-ஆசிரிய விருத்தம்

மாறு படுஞ்சூர் ஓட முனிந்தார் வான்உயர் செந்தூர்வாய்
ஊறு படும்பே ராசையின் நம்பால் ஊரர் இரங்காரேல்,
நீறு படும்பூண் ஆரமும் ஒன்றே நேரிழை கண்சோர்நீர்
ஆறு படுங்கால் யாவர் அறிந்தார் ஆவி படும்பாடே. (௧

கலித்துறை

*பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத் தால்நர கேழுஞ்சென்
கூடா துயர்கதி கூடுவ னோ?குன் றெறிந்த வைவேல்
சேடார் மதிற்செந்தி லாய்என்கொ லோநின் திருவருளே

## தலைவி கூற்று - வெண்பா

அருட்கடல்வாழ் செந்தில்நகர் ஆய்வளைக்கை நல்லாய்
பொருட்கடல்வேல் மன்னர்என் போனார் - மருட்குவளைக்
கண்பொழிய முத்தம் கனகம் முலைபொழிய
நண்பொழிய நாம்மெலியும் நாள். (அ௫)

## பாங்கி கூற்று - கலிப்பா

நாணளினந் தளையவிழ்ந்த நறுமலர்ப்பொற் பொகுட்டகட்டுக்
கோணளினந் துறங்குவயற் குமரன்மா செந்திலின்வாய்ப்
பாணளினந் தலரளக பாரமுகில் சோரமணிப்
பூணளினந் தனித்தாவி புல்லாது நில்லாதே. (அ௬)

## வெண்பா

*நில்லாத நீயும் நிலைநின்ற என்றனக்குப்
பொல்லா தனவாம் புலன்அடக்கிப் - பல்பகலுங்
கார்த்திகையான் செந்திற் கடிநகரைக் கண்ணாரப்
பார்த்திகையால் நெஞ்சே பணி. (அ௭)

## கலித்துறை

*பணிப்பகை மயிலுஞ் சேவற் பதாகையும்
பன்னிரண்டு
மணிக்குழை களும்ஓர் ஆறு வதனமும்
வாகைவேலும்
தணிப்பசுங் கடப்பந் தாரும் தண்டையந்
தாளுநாளுந்
தணிப்பருஞ் செந்தி லாய்என் கருத்தைவிட்
டகன்றிடாவே. (அஅ)

## இரங்கல் - இதுவுமது

அன்றல் அகலும் புணர்ந்தால் புணரும்என்
ஆவியம்மா
குன்றா தமிழ்பொழிற் செந்திலின் வாய்க்குளிர்
மாமதிபோல்

முகன்தாழ் கனங்குழை முத்தணி மூரல்
முகிழ்முலைமான்
மகன்முன்எழுதிய ஓவியம் போலும்
மயிலினையே. (

## தலைவியை வியத்தல் - ஆசிரிய வண்ணவிருத்தம்

மயில்கடவி அண்டகோள முகடதிர அம்பொன்மேரு
வரைபிதிர அங்கை நீடுகூர்
அயில்சுழல உம்பர்வாழ உலகைவலம் வந்தசோதி
அருள்குமரர் செந்தில் போலியார்
குயின்மொழிக ணிந்தபாகு மடமயில்வி ளங்குசாயல்
கொடியிடைது வண்டு வாடுநூல்
இயலுநுதல் இந்த்ரசாபம் இணைவிழிகள் இந்த்ரநீலம்
இலவிதழும் இந்த்ர கோபமே. (

## கார்கண் டிரங்கல் - ஆசிரிய விருத்தம்

கோபம் எழுந்தன மேகம் முழங்கின
கோடல் நிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன
தாரவர் வந்திலரால்
நீபம் மணங்கமழ் மார்பினர் செந்திலின்
நேரிழை நெஞ்சிடையே
சோபம் மலிந்தது ஆவி தளர்ந்தது
சோர்வன கண்டுளியே. (

## கலித்துறை

துளியாது கண்புனல் சோராது மெய்துதி
யாதுசொல்நாக்
களியாது நெஞ்சகம் கைகுவி யாதொரு
காலும்மறை
தெளியாத வானவர் சேனா பதியைத்தென்
செந்திலின்வாய்
வெளியாய் எதிர்த்து தொழார்நர கேழினும்
வீழ்பவர்க்கே. (

## பாங்கி ஆற்றுதல் - குறள் வெண்பா

வீழ்வார் எழார்பொருட்கு விட்டுரைமை வெற்பயிலால்
போழ்வார்செந் தூரடையார் போல். (கூரு)

## பிச்சியார் - ஆசிரிய விருத்தம்

போலிதனக் கென்றுமிலாப் புண்ணியன்கண்
ணுதற்கடவுள் புதல்வன் கோலப்
பீலிமயி லியற்செந்தில் உலைவேற்கைக்
கொலைவேற்கட் பிச்சி யாரே!
நூலிடையைக் குறைத்துமணிப் பணைமுலையைப்
பெருக்கிஎன்றும் நோயே செய்தீர்;
நீலமுகில் ஓதிகுறைத் துயிர்குறைப்ப
தோஉமக்கு நீதி தானே. (கூச)

## தலைவி பாங்கிக் குரைத்தல் - கலிவெண்பா

தானக் குனிகோட்டுத் தந்தியினை யும்விலக்கிக்
கானக் குடிஞைக் கலுழியினிற் காத்தளித்துத்
தேனக்க செச்சையந்தார்ச் செந்திலார்க் கன்பரின்என்
ஊனெக் குருக உயிரிற் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்தல் நன்னுதலே வாரலையென்
றியானுற் றுரைப்பதெவ்வா றின்று. (கூரு)

## கலிவெண்பா

இன்றுலகில் நல்குரவால் ஈடுபடுந் தன்மையினல்
அன்றும் அருவினையேன் ஆன்றஅறஞ் செய்யகிலேன்
என்றும் பிறப்பினும்இப் பெற்றியேம் முற்றும்எனைக்
கன்றும் மனத்தாற் கவலுழந்து நில்லாது
குன்றெறிந்த செந்திற் குழகாஙின் பூங்கழற்கால்
சென்றுதொழு மாறன்பு செய். (கூசா)

## தாய் கூற்று - கலித்துறை

செய்யவ னேஎனும்; செந்தில்எந் தாய்எனும்;
செவ்வடிவேற்
கையவ னேஎனும்; கந்தைமைந் தாஎனும்;
கண்துளிநீர்

பெய்யஅ நேகந் தரம்எழும்; போய்விழும்;
பிள்ளைமதி
வெய்யவ னேஎனும் வேறறி யாள்என்
விளங்கிழையே.

## தலைவி கூற்று - ஆசிரிய விருத்தம்

இழைக்கும் கூடலும், என்னிரு கண்களின்
இமைகளும், இரவெல்லாம்
உழைக்குங் கூடல மந்துதென் செந்திலாய்
ஒருகணங் கூடாவால்;
மழைக்கண் அம்பிகை மலர்க்கரங் கோட்டியே
வார்முலை பீர்ஓட
அழைக்க நின்றுகூத் தாடிய மணிச்சிலம்
பலம்புசே வடியானே.

## கலிப்பா

அடியாரின் உளம்உருகன் பறியாத
என்புன்சொல்
முடியாத நக்கீரர் முருகாற்றுப்
படையாமோ
தொடியார்பன் னிரண்டுதடந் தோளார்க்குத்
திருச்செந்தில்
வடிவாய்வள் ளுகிர்ச்சேவல் வலனுயர்த்த
கொடியார்க்கே.

## வெண்பா

ஆர்க்குங் களிவண் டறையும் பொழில்திருச்செந்
தூர்க்கன் புடன்நீசென் றுள்ளமே - கூர்க்கும்
எழுமையினும் நீபிறப்பில் எய்தாமல் சேயைத்
தொழு;மயிலும் வேலுமெனச் சொல்.

திருச்செந்திற் கலம்பகம்

முற்றிற்று.

# பாட்டு முதற்குறிப் பகராதி

[எண் : பக்கவெண்]

---

# அருஞ்சொற்பொருளகராதி

[எண்—பாட்டெண்]

கலுழார்-நீங்கார், அ௰
கவாரிசம்-நெஞ்சத்
தாமரை, ௪அ
ஞர்-தாமரை, ௪௧; துன்
பம், ௬௧
டல்-வலி, ௩௨, அ௫
ணங்கா-நோயாக, ௨எ
பரும்-செய்யும், ௫௧
பில்-கூர்மை, ௬௧
ருணம்-செந்நிறம், எ௩
ருணி-மான் பெற்ற வள்ளி
நாயகி, ௫
லந்து-துன்புற்றுத் தேடி,
எ௩
லமந்து-சுழன்று, ௧௧
பல்-நீர்நிலை, ௩எ
ரி-வண்டு, ௧௨
றைதல்-முழங்கல், ௧, ௱
னுராகம்-காமவின்பம், ௧௨
ரம்-அன்பு, ௫௬
ணம்-வேதம், ௧௬
ம்-முத்து, ௨௨
ம் இரண்டு-சந்தனம்,
முத்துமாலை, ௩அ
ல்நாள்-கார்த்திகை நட்சத்
திரம், ௧௩
த்தல்-ஒலித்தல், ௱

ஆலும்-முழங்கும், ௧௪
ஆறுறு புலன்-முப்பத்தாறு
தத்துவம், ௧
ஆறு-மார்க்கம், எஎ
ஆன்ற-உயர்ந்த, ௧௬
இணங்கார்-பகைவர், ௬௩
இணர்-பூங்கொத்து, எ
இதண்-பரண், ௬௩
இதழ்-அதரம், ௧௰
இந்திரகோபம்-பட்டுப்பூச்சி௧௰
இந்து-சந்திரன், ௪௬
இமகரம்-சந்திரகிரணம், ௩எ
இம்பர்-இவ்விடம், ௪எ
இரங்கி-வருந்தி (ஒலித்து), ௪௪
இலம்பகம்-நெற்றிப்பட்டம்
இற்றாலும்-கெட்டாலும், ௪
உகிர்-நகம், ௧௧
உடு-நட்சத்திரம், ௧௧
உந்தி-செலுத்தி, எ, எ௧
உரம்-வலிமை, ௬௪
உரு-அச்சம், எ
உலவா-கெடாத, ௧
உழந்து-வருந்தி, ௫௬
உழை-மான், ௨௨, எ௧
உறழ்-ஒத்த, ௬௰
ஊறு படும்-தழும்புபடும்,
அ௩, எ







## கழக வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| முத்துக்குமாரசாமி பிள்ளைத் தமிழ் உரை | 0 | 8 |
| சிதம்பரச் செய்யுட்கோவை உரை | 0 | 6 |
| தண்டியலங்காரம் பழைய உரையுடன் | 2 | 8 |
| நம்பியகப்பொருள் விளக்கம் பழைய உரையுடன் | 3 | 0 |
| யாப்பருங்கலக்காரிகை பழைய உரையுடன் | 1 | 12 |
| பன்னிருபாட்டியல் உரை | 2 | 0 |
| திருக்குறள் பரிமேலழகர் உரை | 3 | 8 |

சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,
6, பவழக்காரத் தெரு, சென்னை.